[13th February 1959

THE HON. SRI R. VENKATARAMAN : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நிதிக் குறைவு ஏற்பட்டதன் காரணமாக இந்த அலுமினியம் "ப்ளாண்டுக்கு" "லோ ப்ரையாரிடி" கொடுத்து கடைசியாக செய்து விட்டார்கள். இதைத் தனியார் துறை எடுத்து நடத்த முடியும் என்று மத்திய சர்க்காரிடத்தில் சொல்லியது சர்க்கார்தான். சொல்லப்போனால் இப்பொழுது இத்தாலியில் இருந்து வந்திருக்கும் நிபுணர்களுக்கு ஆகும் செலவுகளைச் சென்னை ராஜ்ய சர்க்கார்தான் செய்துகொண்டிருக்கிறார்கள். தனியார் துறையில் கம்பெனி ஏற்படுத்திய பிறகு இந்தத் தொகை சர்க்கார் மூலதனமாக ஆக்கப்படும்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்த அலுமினியத் தொழிற்சாலையை மேட்டூரில் ஆரம்பிப்பது என்று திட்டமா? அல்லது சேலம் ஜில்லா டேவிஸ்பட்டியிலே ஆரம்பிப்பதாகத் திட்டமிடப்பட்டிருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இன்னும் முட்டையே இடவில்லை. குஞ்சுகளைப்பற்றி எண்ணுவதில் பிரயோஜனம் இல்லை.

SRI A. A. RASHEED : Is it a fact that the initial report of the Italian expert is a favourable one?

THE HON. SRI R. VENKATARAMAN : I am not at present at liberty to disclose the initial report.

SRI M. P. SUBRAMANIAM : ஏற்கனவே அலுமினியத்திற்கு வேண்டிய மூலப் பொருள்கள் கண்டாவிற்கு ஆராய்ச்சிக்காக அனுப்பப் பட்டதா? இப்போது இத்தாலியில் வந்திருக்கிற நிபுணர்கள் திட்டத்தை எப்படி எடுத்துக்கொள்ளலாம் என்பதைப் பரிசீலிக்கவா அல்லது அலுமினியத் தொழில் துவங்குவதற்கே லாயக்குள்ளதா என்பதை ஆராய்ச்சி செய்திருக்கிறார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : ஏற்கனவே நாம் எடுத்து அனுப்பிய "பாக்ஸைட்" சரியான இடத்தில் இருந்து எடுக்கப் படாததால் அதில் குறைவான அலுமினியம் "கண்டெண்ட்" இருந்ததாகக் கூறப்பட்டது. அதன் காரணமாக மத்திய சர்க்கார் அதை இறுதியில் அமெரிக்காவுக்கு அனுப்பவே இல்லை. அதற்குப் பிறகு பிரான்ஸில் இருந்து வந்த "சேபாட்" (Sabot) என்பவர் இதைப் பரிசீலனை செய்து பார்த்து இந்த பாக்ஸைட், அலுமினியம் பொருந்தியதாக இருக்கிறது என்று கூறினார். இத்தாலியில் இருந்து வந்தவர்கள் இதை நன்றாகப் பரிசீலனை செய்து இந்தத் தொழிலை எடுத்துக்கொள்ள முடியும் என்று அபிப்பிராயம் சொல்லி இருக்கிறார்கள். இந்த பாக்ஸைட்டை இப்பொழுது இத்தாலிக்குப் பரிசீலனைக்காக அனுப்பி இருக்கிறோம்.

SRI A. GOVINDASAMY : இந்தத் திட்டத்தை நிறைவேற்ற ரஷ்யாவில் இருந்து ஏதாவது உதவி அளிப்பதாக அறிவிக்கப் பட்டிருக்கிறதா?

THE HON. SRI R. VENKATARAMAN : இல்லை.

### *House-sites for Harijans*

* 294 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the villages in Lalgudi firka, Lalgudi taluk, Tiruchirappalli district where the Harijan colonies (cheries) are found thickly populated and from where petitions have been received for assignment of house-sites;

(*b*) the number of such applications pending before the Harijan Welfare Department;

(*c*) whether acquisition proceedings have been started in the said firka for assignment of house-sites; and

(*d*) the time by which acquisition proceedings will be completed and possession given?

THE HON. SRI P. KAKKAN: (*a*) A statement [a] is placed on the table of the House.

(*b*) Eighteen, Sir.

(*c*) Yes, Sir.

(*d*) No time-limit can be fixed. It depends upon the nature of each case.

* 295 *Q.*—SRI M. JAGANNATHAN: Will the Hon. the Minister for Public Works be pleased to state the number of Harijans provided with house-sites free of cost in the Tindivanam taluk, South Arcot district, in 1957–58?

THE HON. SRI P. KAKKAN: No house-sites were assigned to the Harijans free of cost in Tindivanam taluk, during 1957–58, though lands were acquired for the purpose.

SRI S. LAZAR: இவைகளில் பல "அக்விசிஷன் ப்ரோபோசல்கள்" சர்க்காரிடத்திலே "பெண்டிங்" ஆக இருப்பதாகவும், அதற்குக் காரணம் ஏற்கனவே பிரசுரிக்கப்பட்ட "நோடிபிகேஷன்" பிரகாரம் அக்விசிஷன் "ஆபீசர்" ஆர். டி. ஒ. வாக இருப்பதால் இப்பொழுது இருக்கக் கூடியவர் "டிஸ்ட்ரிக்ட் ஹரிஜன் வெல்பேர் ஆபிசராக" இருப்பதன் காரணமாகவும் தாமதம் ஏற்படுவதன் காரணமாக அரசாங்கம் இதை உடனடியாகக் கவனித்து நடைமுறையில் கொண்டுவர நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI P. KAKKAN: சீக்கிரம் நடைமுறையில் நடத்தத் தக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. ஆறு "கேஸ்"கள் "இன்வெஸ்டிகேஷனில்" இருக்கின்றன. 18 கேஸ்கள் நோடிபிகேஷன் ஆப் டிக்ளரேஷனுக்குத் தகுந்த நிலைமையில் இருக்கின்றன.

SRI M. JAGANNATHAN: திண்டிவனம் தாலூகாவில் நில ஆர்ஜிதம் செய்யப்பட்டபோதிலும் மனைகள் வழங்குவது இல்லை என்று மந்திரிகள் அவர்கள் கூறினார்கள். அதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN: "சைட்" வாங்க பணம் கொடுத்திருக்கிறதா என்று கேட்டார்கள். பணம் கொடுக்கவில்லை என்று சொல்கிறேன்.

SRI K. PONNIAN: ஹரிஜனங்களுக்கு மனை லால்குடி பிர்க்காவில் மட்டும் அல்ல. மாகாணம் பூராவும் பிரச்னையாக இருக்கிறது. அவர்களுக்கு மாடு வாங்கும் சலுகை, கிணறு வெட்டும் சலுகை அளிப்பதைக்கூட தள்ளிப்போட்டு மனைப் பிரச்னையை உடனடியாகத் தீர்க்க சர்க்கார் முன்வருவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: அந்த முடிவினை இப்போது சொல்வதற்கில்லை.

SRI A. GOVINDASAMY: ஹரிஜனங்களுக்கு மனைக் கட்டு வழங்குவதில் எல்லா இடங்களிலும் இலவசமாக வழங்குவதற்கு அரசாங்கம் உத்தரவு இடுமா ?

[a] Printed as Appendix II on page 323 infra.